தமிழுலக முழுதும் பிரசித்திபெற்ற

செந்தமிழ்ப் பாவலர், கம்பமாநகர்

ஸ்ரீமான். மி. பீர்முகம்மது சாகிபவர்கள்

இயற்றிய

# பாமஞ்சரி

இதன் ஒரு பகுதியில்

நபிகள் பெருமான் முதலாயினோர்மீது

இயற்றிய பதங்களும்

மற்றொரு பகுதியில் நாடகத் தமிழ்ப் பாடல்களும்

தேசபக்தர் முதலாயினோர் வாழ்த்துக் கவிகளும்

அடங்கியுள்ளன.



ஸ்ரீரங்கம்:

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்.

1920.

8. Price As. 8.

ஸ்ரீமான் மி. பீர்முகம்மது சாஹிபவர்கள்

இயற்றிய

# பாமஞ்சரி.

இஃது

திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ் தலைமைத்

தமிழ்ப் பண்டிதரும் மதுரைத் தமிழ்ச் சங்கப்புலவரும்

இந்நூலாசிரியரின் ஆசிரியருமாகிய

இலக்கண உபாத்தியாயர்

ஸ்ரீலஸ்ரீ ஆ. கா. பிச்சையிபுராகீம் புலவரவர்கள் குமாரர்

மகா-ள-ள-ஸ்ரீ ஆ. பி. முகம்மது

கனிராவுத்தரால்

அச்சிடப்பெற்றது.



ஸ்ரீரங்கம்:

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்.

1920.

இதன் விலை அணா 8.





# பாமஞ்சரி.

---

## நபிகள் பெருமான் முதலாயினோர் மீது

## பதங்கள்.

### காப்பு—வெண்பா.

கோப்பொருளா யுள்ளக் குடிப்பொருளாய்ப் பாவலவர்
நாப்பொருளா யார்க்கு நடுப்பொருளாய்—காப்பரு
ளும்
வல்லோ னருளாற்பா மஞ்சரியை வண்டமிழ்ச்செஞ்
சொல்லா லிசைப்பாந் துணிந்து.



(பர பர ஜாமபிலா குனலாலா என்ற மெட்டு).

இராகம் - காபி - தாளம் - ஆதி.

திருமதிநபுர மேவிய கோவே
சீராரு முஸ்தபாவே
தே-வ- தே-வே (திரு)

(தொகையறா).

தெய்வீக வாழ்வு சான்ற சீலரான நாயகமே
மெய்வேத நீதியோது மேன்மையாளர் தாயகமே (திரு)

தருமதயாநிதியே உயிர் யாவும்
தானாகி நின்ற வாழ்வே.
தாழ் - வி - லா - த (தரும)

சத்தான பூர்வஞான சாகரத்தினுண்ணறிவே
சித்தாகி யின்பமான சேகரத்தினுட் செறிவே (திரு)

எழுபதினாயிரம் ரகசியம் பேச
ஈடற்ற ஓரிராவில்
ஏ - க - னோ - டு (எழு)

இன்பார் விமானமீ திலேறிவிண்ணி லேபுகுந்தீர்
மின்போல வேகமாக மேதினிக்கு மீண்டுவந்தீர் (திரு)

பழுதுவாராமலே பீர்முகம் மதுநன்
பந்தத்தை மாற்றுவீரே
பா - சத் - தா - லே (பழுது)

பாலோடு தேன்கலந்த பான்மை போலவே
தனிமை
மேலோன் வரத்தினுங்கள் வேண்டுகை சேர்ந்தா
வினிமை (திரு)



(ஹமர்சே நபி ஆஜி அலாபனே என்ற மெட்டு).

இராகம் - செஞ்சுருட்டி. தாளம் - ஆதி.

தயாநிதியே - வர்மம் - சாதிக்கலாமா (தயா)

சாதிக்கலாமா - சோதிக்கலாமா (தயா)

தந்தையும் தாயும் நீர் - சத்தியமாகச்
சற்குருநர்தரும் நீரல்லவோ - வர்மம். (சாதிக்க)

தற்பரன் தோழரே - கற்பகப்பாதம்
தாழ்ந்தவர் போற்றத் தகாது கொலோ - வர்மம்
(சாதிக்க)

அழுதபிள்ளைக்குப் பால் - அன்னையரீவார்
அவ்வண்ணமேயருளாட்சிசெய்வீர் - வர்மம் (சாதிக்க)
முத்தமிழாலும் பீர் - முகம்மது வாழ்த்த
முன்னிற்குங் காட்சியில் மோகமுற்றேன் - வர்மம்
(சாதிக்க)



(கொஞ்சம் சங்கடமா என்ற மெட்டு)

இராகம் - நடபைரவி தாளம் - ரூபகம்.

நெஞ்சம் புண்படவோ
நேரானதீன்வழி சேராமலேமட (நெஞ்சம்)

நிலைமை தவறி யலையு மெனது (நெஞ்சம்)

நினைத்து நினைத்து வருத்த மிருத்து (நெஞ்சம்)

நிச்சயத்தை விட்டொழித்து நெட்டுயிர்ப்பு
மிச்சமுற்று (நெஞ்சம்)

நித்தஞ்சரமேகரிந்து பித்தம் சிரமேல்விரிந்து
(நெஞ்சம்)

நேசித்தோர் செய்த பெரிய மோசத்தால்
மெய்பதறியே (நெஞ்சம்)

தஞ்சமென்றே யும்மை அஞ்சலித்தேனே
சத்தியநீதி தருமெம்பிரானே
வஞ்சகமேயில்லை கொஞ்சமுந்தானே
மானங்கெட்டோராலே நானுங்கெட்டேனே
மதிபெரிதென் பதுவீணர் வாதமாகும்
விதிவலிமுந் துவதாலே போதமேகும்
வாதமும் மதிபேதமும் பஞ்சபூதமும் விப
ரீதமே யன்றோ
மட்டற்றே பற்பலதுயர் பட்டுத்தேறிப்புவிமிசை
திட்டத்தேநிற்கவுமது பட்டப்பேரைக்
கருதிய (நெஞ்சம்)

சென்றதை யெண்ணினுல் ஒன்றும் வாராது
செத்தவர்மீண்டு திரும்புவதேது
தொன்று தொட்டுவந்த நன்றியிப்போது
தோன்றவைத்தால் மனச் சான்று தப்பாது
துதிபுரியும் தமியேனின் வாதை நீங்கும்

கதிமருவும் படிதீனின் பாதையோங்கும்

தூயரே யிறைநேயரே மறைவாயரே நற்சகாயரே

பின்னுள்

சொர்க்கத்தே வாழ்வினையருள் - மக்கத்தீர்

சூழ்வினையொரு

மிக்கத்தீர் நாள்வரும்வரை - துக்கத்தாற்

பீர்முகமது (நெஞ்சம்)



(போத்தல் குல்விஹே ஷாபுக்கே என்ற மெட்டு).

இராகம் - பியாக். தாளம் - திஸ்ரகதி.

காத்தருள் செய்வதெக்காலமோ - இன்னும்

காவாதிருப்பதுவும் சீலமோ

கல்லாத பாவிநான் - நல்லோரை மேவிலேன் - மக்

காவாழும் கோவே கதிநீரேதான்

கத்தனிரக்க மளித்து நினைத்திடுங்

காரியங்கை கூடவே (காத்தருள்)

தோத்திரஞ் செய்தேன் பொற்றாளையே - திருத்

தொண்டுகொள்வீரிந்த வேளையே

தூயோரிணக்கமும் - ஓயா வணக்கமும் - மெய்ச்

சோர்வின்றி வாழும் சுகவாழ்க்கையும்

தோன்றும்படி பீர் முகம்மதுக்குச் சுப

சோபனங்கள் கூறியே (காத்தருள்)





(கொல்லாமற் கொல்லுகிறான் என்ற மெட்டு).

இராகம் - பியாக். தாளம் - ஆதி.

கெட்டோர்கள் கூட்டுறவில் பட்டோர்வு தீட்டுறவே
கேவலக்கவி பாடமெத்தவும் ஆவலைத்தரு நாட
கத்திலும்
கெட்டலைய விட்டிடலாமோ - கிருபையிதோ
(கெட்டலைய)

எட்டாத வான்பட்டரும் மட்டார்பொழில் மதிஞ
இலங்கு கற்பகமே - அருள் - துலங்கு நற்சுகமே-பெற
இருபதத்துணை தருவதற்கினி வருவதெப்பொழு
தொருவிதத்திலும்
ஏக்கமற மார்க்கமில்லையே - இயலறிந்து (ஏக்கமற)

என்போன்றபுல்லறிவோர் அன்பார்ந்த நல்லவர்போல்
இருந்துபற்பல விருந்தளிப்பதை யருந்தியப்புறம்
வருந்துசொற்சொல
ஏற்புடைய வாழ்க்கையிலே நான்-இசைந்து நின்றேன்
(ஏற்புடைய)

முன்போலத் தூயநிலை இன்பாகச் சேர்வழியை
முடித்து நித்தியமும்-கடைப்-பிடித்த சத்தியமே-மன
மூண்டிருப்பது பீர் முகம்மது வேண்டுகைத்திறம்
சீர்மிகுந்திடு
மூதறிஞரோதுபிரானே - முத்திநெறிதேர் (மூதறிஞ)



(என்ன லாவண்யமே என்ற மெட்டு).

இராகம் - அரிகாம்போதி. தாளம் - ஆதி.

அஞ்சாதே நெஞ்சமே - ஆதரவில்லையென்று (அஞ்)
மஞ்சுதவழ் சோலைமக்க வள்ளலடி யுள்ளதனால் (அஞ்)

ஆதியொளியாயிருந்து மேதினியிலுற்றவர்
அற்புதங்கள் பற்பலசெய் நற்பதவி பெற்றவர்
வேதநபிமார்களுக்கு நாதரெனும் கொற்றவர்
மெய்யவனிடத்தில் வரங் கேட்டு - மிக
வெய்யபவமுற்ற நம்மை மீட்டு - அருள்
செய்குவா ரவர்பதத்தின்கூட்டு - தினம்
சேரவே மொழிவோம் தமிழ்ப்பாட்டு
சித்திபெற நாடு - உத்தமர்களோடு
நத்தியுறவாடு - முத்திநெறிதேடு (அஞ்சாதே)

பஞ்சுபடும் பாடுநாமே பட்டதெல்லாம் உண்மையே
பாரிலே துயருக்குப் பயப்படுதல் பெண்மையே
பிஞ்சிலேபழுத்துவிட்ட பேய்க்குணத்தின் திண்மையே
பீர்முகம்ம துற்றறிந்த தீங்கு - இனிப்
பெணகளின் மையலைவிட்டு நீங்கு - புத்திக்
கூர்மைதரும் நல்ல குடிப்பாங்கு - நன்னைக்
கொண்டுமறைக் கட்டளையைத் தாங்கு
குற்றம் பறந்தோடும் - கோரிக்கையும் கூடும்
சுற்றமும் கொண்டாடும் - தூயோனருள் நீடும் (அஞ்)



(வருந்துவதழகோ மன்ன என்ற மெட்டு).

இராகம் - இந்துஸ்தானி தோடி. தாளம் - ஆதி.

திருப்பதமருள்வீரையா மக்கச்செல்வரே
திருப்பதமருள்வீரையா
பருப்பதம்போலே - பவத்தொடராலே
பாவிநானே வருந்துவது தர்மமா (திருப்பத)

தாயிலன்புடையீர் - தண்முகிற்குடையீர்
தாழச்சி செய்கிறேன் - தனிக்கரக்கொடையீர் (திருப்)

உள்ளச்சம் போகக் - கள்ளச்சம்போகம்
ஓடியாடிச்செய் துடைந்தது தேகம் (திருப்பத)

வாழ்வினுக்குரிய - மணந்தனைப்புரிய
மார்க்கநீதியின் வகைதொகைதெரிய (திருப்பத)



(திருவடி சேவித்தேன் என்ற மெட்டு).

இராகம் - ஆரபி. தாளம் - ஆதி.

இருவிழி நீர்விட்டு ஏங்கினேன் சீர்கெட்டு
இரக்கம் வைப்பீரே - பீரே
உருவருவாயிலங்கும் ஒருபரஞ் சோதிபொங்கும்
கருணைக்கடலின் முத்தே கருதுமுத்திக்கு வித்தே
(இரு)

ஏவல் விலக்கலென்னும் இரண்டையும் கண்டறிந்து
ஏற்கும் வழியைப் பற்றிலேன்
ஆவல் பெருகிநிதம் ஐந்துபோதுந் தொழுது
ஆதியருளைப் பெற்றிலேன்
காவல்புரிவதுங்கள் கடமையன்றோ கோமானே
நாவல்லோர் தம்மிதய நளினமலர்ச் செந்தேனே (இரு)

மரணத்தை யெண்ணும்போது மனம்படும் பாடு
தன்னை
வகுப்பதற்கில்லை வசமே
கிரணத்தைப் பெறுங்கதிர் தலைதொடுஞ் செப்புத்
தரைக்
கேள்வி கணக்கோ நிசமே
சரணத்தை நம்புமென்றன் சஞ்சலத்தை மாற்றுவீர்
தருணத்திற் கைகொடுத்துத் தாங்கிக்கரை
யேற்றுவீர் (இரு)

தெரிந்துந் தெரியாமலும் செய்தபிழைகளெல்லாம்
தீயிடைப் பஞ்சுபோலவே
எரிந்துதொலைய வுள்ளம் பளிங்குக்கண்ணாடி யென
இலகி நல்லருள் சாலவே
புரிந்திடும் தயவுக்குப் பொருத்தமிப்போதுதானே
பரிந்துபீர் முகம்மது பாடிப் புகழுவேனே (இரு)



(போலோ போலோ சாவ்ரியா என்ற மெட்டு).

இராகம் - பியாகு. தாளம் - ஆதி.

வாழி வாழி யென்னெஞ்சமே நாழியும் பஞ்சமோ
வா - டா - தே
மண்ணாளும் மன்னவரும் மாண்டொழிந்து
மண்ணவர்
வாழவு - மேலா - மோ (வாழி)

சாகவரம் படைத்தோர் தாரணியில யாருமில்லை
தாழ்வு - பாரா - தே (வாழி)

உத்தியோகம் புரிந்து ஒருபலனுங் கண்டிலேயே
ஒய்வு - தேடு - வாய் (வாழி)

மூவாநிலைப்பொருள்பீர் முகம்மதருட்
செல்வமொன்றே
மூடர் - காணா - ரே (வாழி)



(எங்கே சென்றாலும் கூட என்ற மெட்டு).

இராகம் - செஞ்சுருட்டி. தாளம் - ஆதி.

சித்தங்கலங்கி நொந்தேனே - அருள்
செய்வீரே யெம்பெருமானே

மூத்தொளிவான் முகம்ம திரசூலே
நித்தமுமென்னை நெருக்கும் துயராலே (சித்தங்)

பெண்ணுஞ்சயாற் கெட்டகேடு - நாவால்
பேசத்தொலையாப் பேரேடு
எண்ணில்லாப் பாவுங்களோடு - நான்
எவ்வாறு சேர்வேன் பொன்னுடு
மண்ணுகும் தேகம் வளர்க்கப்படும்பாடு
மானுவமானங்கள் பேணுமுறையீடு (சித்தங்)

தேசிகனைக்கண்டு நேசம் - கொண்டு
தேர்ந்திலனே யுபதேசம்
நீசர்களின் சகவாசம் - செய்து
நேரிட்டதே பெருந்தோஷம்
மோசம்போனேன்பீர் முகம்மதே நம்பாசம்
மூண்டாலன்றியாமோ வேண்டும் பவநாசம் (சித்தங்)



(நீலமேகவண்ணம் என்ற மெட்டு).

இராகம் - செஞ்சுருட்டி. தாளம் - திஸ்ரகதி.

பாவியாகுமென்னை ஆவிபோகுமுன்னே பற்றியே
அருள் முற்றியே - தவவெற்றியே - தந்து
பாதுகாத்திடுவீர் பேதலிக்குதுள்ளம் சுற்றியே

பூவின்மாதவர்கள் நாவின்மீதுவளர் போதகரே
இறைதூதரே - நபிநாதரே - மதி
பொற்பதம்பரவ அற்புதம்புரியும் வேதரே

தார்புனைந்தகுழ லார்செயுங்கொடிய ஜாலமே
மண்ணின் தூலமே - எண்ணிச்சீலமே - கெட்டேன்
தாங்கொணாதபெருந் தீங்குநீங்குவதெக்காலமே.

சீர்மொழிந்துருகு பேர்முகம்மதுதன் சிந்தையே
உணர்ந்தேந்தையே - இன்னும் நிந்தையே - புவி
செப்பநானிருத்தல் ஒப்புமாகிலிது விந்தையே.



(அம்பாள் மதுரை மீனாட்சி என்ற மெட்டு).

இராகம் - தேஸிகதோடி. தாளம் - ஆதி.

வள்ளல் முகம்மதிரசூலே - நம்
வனசமலர்க்காலே - இவ்வேளை
வழங்குவீ ரன்பாலே
மறவேனினிமேலே - மறவேனினிமேலே

நான்

உள்ளங் கலங்குவது தகவோ - என்
உடல்பிணியே மிகவோ - பொல்லாத
உலகமிகழ்ந்து நகவோ
உயிர் நரகம் புகவோ - உயிர் நரகம் புகவோ

இந்தத்

துன்பஞ் சகிக்கமுடியாது - இனிச்
சோதனையாகாது - மொழிந்த

சொல்வி லுண்டோ சூது
துணையு மெனக்கேது - துணையு மெனக்கேது

ஐயா

முன்பு மானுக்குப் பிணைநின்றே - புகழ
முதிர்ந்த கருணைக்குன்றே - தொண்டன்பேர்
முகம்மது குறையின்றே
முடிப்பதுவு நன்றே - முடிப்பதுவு நன்றே.



(ஐயா பழனிமலை வேலா என்ற மெட்டு).

(இராகம் - ச[illegible]ா. தாளம் - ஆதி).

ஐயோ கொடியதலை விதியே - இனி
யாரிடஞ் சொல்லுவதென் கதியே
பொய்யா நபிகட்கதி பதியே - என்னைப்
புறக்கணித் திருந்தனர் தகியே (ஐயோ)

கையோ வருவதில்லை மடக்க - இரு
காலும் வழங்கவில்லை நடக்க
மெய்யோ படுக்கைதனில் முடக்க - வச
மேவுதில்லையே சும்மா கிடக்க (ஐயோ)

ஓயா திறை யவனைத் தொழுது - மனம்
உருகிப் பல தடவை யழுது
கூயோ முறையிட்டம்ப பொழுது - சற்றும்
குறையவில்லையே பிணிப பழுது (ஐயோ)

நாயேன் சிறகில்லாத காகம் - போல
நாள்கழித் தென்னவுப யோகம்
மாயா விகாரமென்னும் தேகம் - இன்றே
மடிந்து விட்டாலு நலமாகும் (ஐயோ)

மாதம் பல கடந்து போச்சே - நான்
மதித்த முயற்சியும் பாழாச்சே
போதங்கலங்கிப்பெரு மூச்சே - விட்டுப்
புலம்புவ துலகத்துக் கேச்சே (ஐயோ)

மோதுங் கடற் புவியின் மீது - பீர்
முகம்ம தனுபவிக்கும் தீது
ஓதும் பகைவர்க்கு மாகாது - உள்ளம்
உடையுதே நினைத்திடும்போது (ஐயோ)



(புதிய காவடிச்சிந்து மெட்டு)

இராகம் - செஞ்சுருட்டி. தாளம் - ஆதி

எல்லா வுலகுமொரு சொல்லாலமைத்தருளும்
வல்லோனளித்த தூதர் - சுவர்க்கநெறி
வல்லே தெளித்த நீதர்

கல்லாத மூடர்செய்யும் பொல்லாதபேய்வணக்கம்
இல்லா தொழித்துநின்றவர் - தனிக்கடவுள்
அல்லா வொருத்தனென்றவர்

செல்லூருஞ் சோலைமக்க நல்லூரின் காவலராய்
நில்லா தவக்குமாரர் - இபுலீஸ்தன்னைக்
கொல்லாமற் கொல்லும் வீரர்
தொல்சீர் மிகவெடுத்துச் சொல்பீர் முகமதுக்கு
நல்வாழ்க்கை நல்கு முறையோர் - புலப்பகையை
வெல்வோர்க்கினிய மறையோர்.



(கஜிராமே மேரே என்ற மெட்டு).

இராகம் - ப்யாகு. தாளம் - ஆதி.

வருவாரோ - வள்ளல் - வாராரோ காணேனே
வருவாரோ - பதம் - தருவாரோ வள்ளல்
வாராரோ காணேனே

(தொகைரா)

வானோர்கள் போற்று மதினாபுரத்து
மகிபாளர் தங்கள் பத சேவை
ஏனோ கிடைக்க விலையென் னுயிர்க்கும்
இரு கண்களுக்கும் அது தேவை (வருவாரோ)

கஸ்தூரிகாத தூரங் கமழ்ந்த
கதிர் மேனிகண்டு மகிழ்வேனோ
விஸ்தாரமான பல பாடல் கூறி
வெகுநேர நின்று புகழ்வேனோ (வருவாரோ)

சிறுவுரைத்த உம்மென்ற தூய
திருநாவலர்க்கு வைதீகம்
மாறுத காட்சி யறுபத்துமூன்று
வாய்த்திட்டதென்னும் ஐதீகம் (வருவாரோ)

முன்னுளறிந்த பெரியோர் வரைந்த
மொழியுண்மை யென்ற மெய்யெண்ணம்
பன்னுளுமெண்ணி நெஞ்சம் கரைந்து
பணிபீர் முகம்ம தூய்வண்ணம் (வருவாரோ)



(பூவருந்திருவே என்ற மெட்டு).

இராகம் - புன்னுகவராளி. தாளம் - திஸ்ரகதி.

நாகையம்பதியே - உறை - நாதர் சங்கதியே - பல
நாளு மின்பொடு தேறிநன்று செயாதலைந்து
வருந்துதேது
பாவி நெஞ்சகமே - பழி - மேவு வஞ்சகமே - மிகு
பாழுமங்கைய ராசைகொண்டடை யாததுன்ப
மடைந்ததன்மேலும் - ஞானமுந் தெரியாய்
அவதானமும் புரியாய் - இனி
நாயினுங்கடை யாயெனும்படி நீதிரிந்திடி
லம்புவிமீது - வீணன கேவலமு றேருமே.
நாவடங்கிடுமேல் - நல - மேதொடங்கிடுமே - இதை
நாடிவம்பர்க ளோடிணங்குத லேயொழிந்து

பயன்பெறுமாறு - ராவொடும்பகலாய் - இறை
நாமமும் புகலாய் - இழி
நாடகம்பயில் மூடரின்புறு பாடலின்று
மொழிந்தனை சாவு - நாளைவந்திடுமோ - இது
வேளைவந்திடுமோ - என
ஞாபகந்தனி லேபதிந்தறி வோடுநின்று
இருந்துக தாழ்வு - மேவாது பீர்முகமதாணையே.



(தக்க பாராங்கல்லைத் தூக்கி என்ற மெட்டு).

இராகம் - கல்யாணி. தாளம் - ரூபகம்.

மாட்சிமிகுந்த தீனோரே - மக்க
வள்ளல் முகம்மதை நீரே - மனச்
சாட்சிப்படி போற்றுவீரே - உங்கள்
சங்கடத்தை மாற்றுவாரே.

சாவு நெருங்கியபோது - ஓடித்
தப்பிக்கவோ முடியாது - வாயும்
நாவும் வறண்டு கண்காது - மங்கும்
நாடியுமே நடவாது (மாட்சி)

சாற்றும் விசாரணைக்காலம் - சிராத்
தல்முஸ்த ஹீமென்னும் பாலம் - தன்னில்
எற்றும்பொழுதனு கூலம் - செய்வோர்
இல்லையென்றால் அலங்கோலம் (மாட்சி).

செல்வச்செருக்கோ பொல்லாது - கதி
சேரத்துணையாய் நில்லாது - கற்ற
கல்வித்திறமை வெல்லாது - காட்டும்
கைவரிசையும் செல்லாது (மாட்சி)

மோட்சப்பதவியை நாடி - பீர்
முகம்மது செந்தமிழ் பாடி - நபி
காட்சிபெறுவீரே தேடி - பாது
காப்பார் வல்லோனை மன்றாடி (மாட்சி)



(வாய்முத்துச்சிந்திப்போமோ என்ற மெட்டு).

இராகம் - ஹனுமதோடி. தாளம் - ரூபகம்.

நான் மெத்தத் துன்புற்றேனே நபியே - மன
நலிவேதரு கொடுநோயினால் (நான்)

வள்ளலும் மலரடி வாழ்த்துந் தொழிலைவிட்டு
வஞ்சப் பாதக நெஞ்சத் தோகையர்
தஞ்சத் தாவிடர் மிஞ்சப் பாரினில் நான்)

பட்டுத்தெளிந்திப்போது பக்திகடைப்பிடித்தேதன்
பாடுந்தயினை மூடுங்கலியினி
யோடும்படிதய வோடுங்கருதுக (நான்)

சேவிக்குமெனக்கருள் செய்திடத்தலைப்பட்டால்
செய்யாதிரெனத் தடுப்பவர் யாரே
ஐயா சேவடி கொடுப்பவர் நீரே (நான்)

பிர்முகம்மதே நுந்தம் பெயரெனக்குமே சொந்தம்
பேதந்தானுள தோவந்தாள்வது
நீதந்தானிலையோ தந்தாய்தனி (நான்)



(இலாஜதாகநில் தும்லே என்ற மெட்டு)

இராகம் - சிந்துபைரவி தாளம் - ஆதி.

தகாத பவ வினைக்காளாய்ச்—சரீரம்
தானிளைத்தேனே
அகால மரணம் வந்தாலும்—என்னை நீர்
ஆதரிப்பீரே
ஹபீபே என்றைக்காணலும்—ஈடேற்றும்,
காவலோர் நீரே
ஷபாஹத் தாலேதீனோரைத்—தற்காக்கும்
சர்வரே ஆலம்
என்னாலே ஆவதொன்றில்லை – ஈதேயென்
எண்ணத்தின் எல்லை
பொன்னைபோல் போற்றிடும் பாதம் - அளிக்கும்
புண்யமே நீதம்
மன்றாடிப் பன்முறைவேண்டும் - வரங்கள்
வாய்த்திடில் மீண்டும்
குன்றுமற் பீர்முகம்மது - நுங்கீர்த்தி
கூறிவாழ்வேனே.



(இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - திஸ்ரகெதி)

அடிபணிந்தேனே - என்னை
ஆட்கொள்ளுவீர் கோமானே (அடி)

படிபுகழ்வாய்மையினால் பற்றறுத்த தூய்மையினால்
பரம்பொருளீகை - பெற்ற - பார்த்திபரேதென்னுறைப்
பதியமர்ந்திடும் தேவ தருவே
அதிசயம்பல மேவு குருவே (அடி)

தவநிலைமாறாமல் தற்பெருமை கூறாமல்
சகலரும் போற்ற-வந்த-ஷாகூல் ஹமீதே யேற்ற
தருண மறிந்தே யடிமை மீது
கருணை புரிந்தால் மிடிமையேது (அடி)

சிறந்தநுந் தர்காவைத் தெரிசித்து நற்சேவை
செய்திடநாடித் - தினம் - சேர்கின்றமாந்தர்கோடி
சிந்தையின்கிடை போலே சித்தியே
தந்திடுங்கொடை யாலே நத்தியே (அடி)

காணிக்கையென்கவியே காதலிக்குமிப்புவியே
கவனம் வைப்பீரே - பல - காலும் செப்புவேன்பேரே
கருத்தினைத்திட மேமிகும்படி
திருத்தி நித்தமும் பீர்முகம்மது (அடி)



இராகம் - காம்போதி. தாளம் - ரூபகம்.

பல்லவி.

ஈகையாளரில் ஈடிலாதவர்
எங்களாண்டகை மீருவே (ஈகை)

அநுபல்லவி.

தோகைமாமயி லாடு சோலைகள்
சூழு நாகையில் வாழு நாயகர் (ஈகை)

சரணங்கள்.

வாரியிலே பெற்ற நீரினைவான்முகில்
வையகத்தோருக்குப் பெய்வதுபோலே
கோரியபேர்களின் காரியம் யாவுங்கை
கூடும்படி யிறையோனருள்
நீடுந்திரு மறையேபொழி (ஈகை)

இத்தரைமீதினில் உத்தமர் செல்வத்தால்
யாவருமேபயன் மேவுதல் போலே
பத்திவைராக்கிய முத்தியின் பாக்கியம்
படைத்தே பல திறத்தோர்களும்
கடைத்தேறிட அளித்தேவரும் (ஈகை)

பாவலர் பாடலை ஆவலுடன் கொண்டு
பாலனம் செய்திடும் சிலரைப்போலே
சேவடித்தோத்திரம் செய்பிர்முகம்மது
செப்புந்தமி ழுக்கன்பு செலுத்துங்கரு ணைச்சுந்தார்.
(ஈகை)

(ராமபஜன ஹோதியா என்றமெட்டு)

இராகம் - தேசிகமுகாரி - தாளம் - ஆதி.

பாழுமனது வாடுதே - பகலிரவு (பாழு)

வாழுமிப்பூவினில் மகிழ்ச்சியும் துன்பமும்
வருதல் சகச மல்லவோ - பகலிரவு (பாழு)

ஊழின் வினைப்படி உறுவது பிறவினை
சூழினும் முந்துமல்லவோ - பகலிரவு (பாழு)

தெய்வத்திருவுளச் செயல்களை யாருமே
தெரிதலியலா தல்லவோ - பகலிரவு (பாழு)

உள்ளமெக்காலமும் ஒருதன்மைத்தாகுதல்
தெள்ளியோர் கொள்கையல்லவோ - பகலிரவு (பாழு)

முன்னவன் றாதர்பீர் முகம்மது தேற்றமாய்ச்
சொன்ன விதியீதல்லவோ - பகலிரவு (பாழு)



(இஸ்கேபுரா ஜஞ்சால் என்ற வர்ணமெட்டு.)

நத்தரொலி சாகிப் - சரணம்
நத்திப்பணிந்தாலிஷ்ட
சித்தியுண்டாமே
உத்தமவள்ளலவர் - சரணம் (நத்திப்)

சித்தர்களுறையுந் திரிகிரபுரத்தார்
செய்தவப்பயனால் வைகிடும் வரத்தார்
முத்தரெனுந்தரத்தார் - சரணம் (நத்திப்)

பாதுஷாவென்னும் பதவியிற் பிறந்தோர்
பூதலத்தாசை பொய்யெனத்துறந்தோர்
மார்தவந்தாற் சிறந்தோர் - சரணம் (நத்திப்)

ஆதியினருளை அவனியிற் சொரிந்தோர்
அதிசயம் பலரும் துதிசெயப் புரிந்தோர்
நீதியெல்லாந்தெரிந்தோர் - சரணம் (நத்திப்)

பிச்சையிப்ராகீம் பேசுமெய்த்துதியோர்
பீர்முகம்மதுவும் பேணு நற்கதியோர்
இச்சைகொள் சந்நிதியோர் - சரணம் (நத்திப்)



இராகம் - கேதாரகௌளம் - தாளம் - ரூபகம்.

மோடி செய்யலாகுமோடி மோகம் தீரடி என்றமெட்டு.

பல்லவி.

சீர்முகைய்ய தீனே நானே - சீவன் வாடினேன்
தேகமுமெலிந்திடச் — சீவன் வாடினேன்

அநுபல்லவி.

பீர்முகம்மது நாதர் மாதவப்
பேரரே — உதாரரே - பின்னமிலாதருள்வீரே (சீர்)

சாவாங்கள்.

சிந்தைபேங்கிய வேளை யாளும்
தேவரீர்தக் தாளை நாளும்
சொந்தமாக்குந் தொண்டுக்கன்பு
தோற்றவே தேற்றுவீர்
வேற்றுமை யெள்ளள வில்லை சொன்னேன் (சீர்)

பங்கம் பலகால் வந்து நேருது
பாவமுங் கூடியே•காலமும் போகுது
எங்கு சென்றாலுமே ஈதன்றி வேறில்லை
ஏழை வருந்தலறிந்தே
இரங்குவீர் வெங்கலி தீரவே (சீர்)



வெண்பா.

ஆதியே அன்பே அருளே அழிவில்லாச்
சோதியே தூய சுடரோநான் - மேதினியிற்
செய்தபல தீவினையுந் தீர்த்துன் றிருமுன்னர்
எய்துநல மீவா யினிது.





# பாமஞ்சரி.

---

## நாடகத் தமிழ்ப் பாட்டல்கள்.

(பாராதியண்டங்கள் படைத்த என்ற மெட்டு).

இராகம் - மத்யமாவதி. தாளம் - ரூபகம்.

வேதாகம மெய்ப்பொருளாய்ந்திடு
விச்சைப் பல துறையோரென
மெச்சத்தகு புலவோரிரு
பாதாரவிந்தங்கள் பணிந்தேன்
பலர்புகழ் திண்டு மாநகர்ப்பாங்கு
பார்த்துப்பாடிப் பரி மளித்திசையோங்கு
கலையோன் பீர்முகம்மது வாழ்த்திடக்
கண்டோர் மகிழக்கோலம்
கொண்டே யினி திக்காலம் (பாதார).



(அருமா மறைமே யென்ற மெட்டு,)

இராகம் - காபி - தாளம் - ஆதி.

திருமா துறையும் சபைவாழ் தகவே
செறிபே ரறிவீ ரடிபணிந்தேன்
ஒருநா யகனை மறவா மனமே
யுடையீ ருமதன் புறவே தினமே (திருமா)

பேர்சிறந்திடு பீர்முகம்மது
பேசுசெந்தமிழ் பீடுறவே
பெருநா வலரே கருணா கரரே
பிழைதீர் தகவே விழைவீர் மிகவே (திருமா)



(ராஜ ராஜத் தாஜ ராஜ என்ற மெட்டு.)

இராகம் தேஷிகதோடி தாளம் - ரூபகம்.

தேற்றுபாதம் போற்றி செய்தேன் செல்வசீலரே-சுய
தேசாபிமானம் பொருந்திய பாரத தேவி பாலரே
திருவளர் புனிதன் மனுநெறிவழியே செங்கோலினை
யோச்சி
சீர்த்தி தாங்குமறை நேர்த்தி யோங்குமுறை செய்திடு
மரசாட்சி
திசைதொறு மருவிய வசையறு புரவலர்
சேர்திறை தந்தடி பணிசூட்சி

ஜெகமது புகழ்பீர் முகமதி மகிழ் கூர்
செழிக்குந்தமிழ் மாட்சி . செழிக்குந்தமிழ்மாட்சி
செழிக்குந்தமிழ்மாட்சி (தேற்று)



## துறவியின் காட்சி.

(ஆயாப்பசுந்தரே என்ற மெட்டு)

இராகம் - தேஸிகதோடி - தாளம் - ரூபகம்.

பாதம் பணிந்தேனையா மாதவரே யென்னை
ஆதரிப்பீ ரன்பு மேவியே
பாதம் பணிகிறேன் தீதணுகாமலே
பாதுகாப்பீர் தேவரீர் - அடியேனைக்கண்
பார்த்திடவேணுமிந்த வேளையே (பாதம்)

பந்தபாசத்தினால் நொந்திடும் பாவியைப்
பாதுகாப்பீர் தேவரீர் - பீர்முகம்மதி
பாடலும் பாதகாணிக்கையே (பாதம்)



## தந்தை காட்சி.

(என்னடி தடை என்ற மெட்டு)

இராகம் - தேஸிகதோடி - தாளம் - ஆதி.

வந்தனந்தந்தேன்-தந்தையேநும் பொன்னடிக்கு (வந்த)

தந்தைசொல்மிக்கொரு மந்திரமில்லை
தாயினிற்சிறந்தொரு கோயிலுமில்லை
இந்தமா நீதியை மைந்தனுணர்ந்திட
இன்பொடு வரமளிக்கும் அன்புடைய பொன்னடிக்கு
(வந்த)

முத்தமிழ் வித்துவ மோகனசங்கம்
முன்னுறத் தலைமையாய் முயன்றிடுஞ்சிங்கம்
முத்தைய பூபனின் சத்திய நேயனும்
வித்தகன்பீர் முகம்மது பக்திநெறிகண்டுமிக (வந்த)



## சோலை வர்ணனை.

(வாரி ஜாவோரே சாவரியா என்ற மெட்டு.)

இராகம் - ப்யாக் - தாளம் - ஆதி.

வன - சோலையின் சிங்காரம் என்ன - சொல்வேனே
என்ன - சொல்வேனே (வன)

மனத்தினைக்கவர்ந்திடு மாளிகைக்காட்சி
மத்தியிலமைந்திடு மாட்சிமே மாட்சி
நினைத்திட நினைத்திட நீடிய சூட்சி
நிகரில்லையென்பதற்குநேத்திரஞ்சாட்சி (சொல்வேனே)

விரனமளாவிய மாக்கிளைசாய
மந்திகள் தாவியே மகிழ்வொடுபாய

தேனுலவுங்கனி யுதிர்வது தூய
தேவர்களுந்தவிழ திரளமுதாய (சொல்வேனே)

சீர்மிகு மல்லிகை செண்பகம் ஜாதி
செவ்வந்திரோஜா மனோ ரஞ்சிதமாதி
பேரிசை வண்டுகள் தாதினையூதி
பீர்முகம்மது கவி பெற்றிடுங் கியாதி (சொல்வேனே)



## வேட்டை.

இராகம் - அடாணா - தாளம் - ஆதி.

பல்லவி.

பாயுதே - புலி - பதுங்கி யொரு புறமாய்
ஒதுங்கிப் புள்ளிமான் மேலே (பாயுதே)

அநுபல்லவி

மேயுங்கலையினங்கள் வெருண்டு பலதிசையில்
தாயுங் கன்றும்பிரிந்து தனித்தனியோடும்படி (பாயுதே)

சரணங்கள்.

வீரா வேசத்துடனே நேராய் வருஞ்சிங்கத்தைப்
பாராய் கொல்லுவேனதைச் சீராயரைக்கணத்தில்
போராய்ந்து புரிந்திடும் புஜபலம் விளங்கிட
ஜோராய் நிற்குங்காடி துடிக்கவதைப்பேணிதோ
(பாயுதே)

நாட்டோ ரிடும்பயிரைக் கூட்டா யழித்துவிடும்
கோட்டானை யொடுபல காட்டா மிருகத்தையும்
வேட்டா ரமுதனைய மெய்ப்பீர் முகம்மதருட்
பாட்டால் மனவுறுதி படித்திவரைப்பேணிதோ

(பாயுதே)



## மயோன் தர்பார்.

இராகம் - கானடா - தாளம் - ஆதி.

வேதியர் நீதியாய் வேள்விசெய்கின்றார்களா
மாதமும்மாரி பெய்து வளஞ்சிறந்தோங்குதா



### மந்திரி.

இராகம் - சங்கராபரணம் - தாளம் - ஆதி.

மறையவர்தங்குல மரபு விளங்கிட
மகமினிதே முறை செய்கின்றார்
மழைவள மும்புவி மகிழ மலிந்திட
மன்பதை நன்றே யுய்கின்றார்

### மயோன்.

வைசியர் சூத்திரர் மரபு வழுவாமலே
செய்தொழில் யாவையும் சிறப்புடன் செய்கின்றாரா

மந்திரி

செல்வமிகுந்திடு வைசியர் செட்டுகள்
சீருடன் செய்தே தழைக்கின்றார்
செய்தொழில் யாவையுஞ் சூத்திரர் முறைப்படி
செய்துள மகிழ்ந்தே பிழைக்கின்றார்

மயோன்.

கொம்பவர் தாந்திறை கொடுத்து வருகின்றாரா
கற்ற புலவருள்ளம் களிசிறந்தோங்குதா.

மந்திரி

குறுநிலமன்னர்கள் திறைநிதி நன்னய
குணமொடு சரியாய்த் தருகின்றார்
செறிபுல வோரும்பீர் முகம்மது போலவே
சீர்த்தியராய் வாழ்ந்தே வருகின்றார்

மயோன்.

வியன்பதி தன்னிலே வேறு விசேடமுண்டோ
வித்தகஞ்சான்ற மந்திரி விளம்புவீர் தேற்றமாய்

மந்திரி.

விந்தைமிகுந்திடும் இந்திர வர்ணமே
மின்னிய கைக்குட்டை விலைகூறி
சந்திர னேர்முக சுந்தர னொருவன்
தானலைகின்றான் நிலைமாறி

## லலிதாங்கி தர்பார்.

(சோப சோப மிலக்கா என்றமெட்டு)

லலிதா—இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - ஆதி

தேசமெங்கு மன்னுயிர்கள் மாசமூன்று மாரியாலே
சீருடன்வாழ்கின் ருரா
திங்கள்முக மங்கையரே சிங்கிதமாய்த்
தெரிவிப்பீர் விவ்ரமே

(வாரணமுகங்கிழிந்து என்ற மெட்டு.)

சேடியர்—இராகம் - செஞ்சுருட்டி தாளம் - ஆதி.

ராஜ ராஜர் போற்றுகின்ற நாகரீக மேற்று நின்ற
ராணிதேவியே மகிழ்ச்சி யடைவீரே
நாட்டில்மாத மூன்றுமாரி வாட்டமின்றி யேபொழிந்து
நாளுமன்னுயிர் செழித்த படியாலே

(கௌனமிசி யாரேத் தோரே என்ற மெட்டு.)

லலிதா—இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - ஆதி.

அந்தணர்கள் ஆலயத்தில் அறுகால பூஜை
அன்பார் நைவேத்தியங்கள் அரிதானவேள்வி
ஆற்றுகின்ருரா - பேர் - போற்றுகின்ருரா (அந்த)

(பாளைவாய் கமுகில் என்ற மெட்டு.)

சேடியர்—இராகம் - ஆனந்தபைரவி - தாளம் - மிஸ்ரம்.

மாறிலாத வேதியர்கள் ஆறுகால பூஜையொடு

மந்திர நைவேத்தியங்கள் செய்கிறார் - அவி
இந்திராதி தேவருக்குப்பெய்கிறார்



(பேசாதிருப்பதென்ன என்ற மெட்டு.)

லலிதா-இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-திஸ்ரகெதி

மங்காத செல்வமிகு வைசியர்கள் நீதி
மார்க்கத்திற் செட்டுத் தீர்க்கமாய்ச்செய்து
வாழுகின்றாரா - தெரிவிப்பீர் (மங்காத)



சேடியர்-இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - ஆதி.

சட்டதிட்டந் தப்பிடாத செட்டுகள் நடத்தியே
மட்டில்லாத செல்வமீறி வைசியர் வசிக்கின்றார்



(மோகமாகினேன் என்ற மெட்டு.)

லலிதா—இராகம் - பியாகு - தாளம் - திஸ்ரகெதி.

க்ஷத்ரியர் நாளும் யுத்தம் பயின்றே
தாஷ்டீக மாயுள்ளாரா - சேடியரே (தாஷ்டீக)



(வக்கணைச்சொல்லே என்றமெட்டு.)

சேடியர்—இராகம் - கல்யாணி - தாளம் - ஆதி.

அம்மணியே யுத்தமதில் விம்முபுய க்ஷத்திரியர்
செம்மையுற நித்தமுமே சேர்கின்றார்



[தக்க பாராங்கல்லே என்ற மெட்டு.]

லலிதா—இராகம் - கல்யாணி - தாளம் - ரூபகம்.

வித்தகமார்சேடி மாரே - மேன்மை
மேவும் வேளாளரென் போரே — நாளும்
இத்தல் மீதினிற் சீரே — பெற்
றிருக்கின்றாரா சொல்லுவீரே



[நாரதன் சொன்ன என்ற மெட்டு.]

சேடியர்—இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - ரூபகம்.

பிர்முக்ம்மதுப் பாவலன்சேர் பெரியப்பாவள்ளலாதி—
தினம்
பேசிப்போற்றுங்கியாதி - மிகப்
பெற்ற வேளாளர் ஜாதி - இந்தப்
பேருலகிலுள் ளோரைத்தாங்கும் பெருமையே நல்ல
சேதி



## பிரிவாற்றாமை - பொது.

இராகம் - சங்கராபரணம் தாளம் - ஆதி.

(இசைந்த சூலம் என்றமெட்டு.)

சுகந்த மேவும் தொடையணிமார்பன் துரைராஜன்
துவண்டு வாடும் படியெனை பொருவிய தனிவேளை
மிகுந்து காயுங் கலைமதி தானுங் கனலாகும்
வெகுண்டுசீறுந் தென்றலுமருவும் புலிபோலும்
அகந்தையாளன் கொடுமதன் விடுமலரதனாலே
அணங்கு நானிங் குறுதுயரதுசொல வசமாமோ
தகுந்த சீலன் பிர்முக மதுமொழி தமிழ்பாடித்
தயங்குறேனின் றவர்வரும்நேரம் அறியேனே



பார்ஸி - ட்யூன். இராகம் - ப்யாகு - தாளம் - ஆதி.

நாதன் வரவுங் காணேன் மனது
நலிவு படலு மானேன் மிகவும்
நா—னே—நா—டி—னேனவரை
நத்தியென்னைத் தேடிவருவார் இத்தருணம் வராமலே
நலமதுகெட விலைமகளிரை நாடினாரோ காண்கிலேனே—
நா—னே

தே—டி—யே— யிங்குவாடுறேனே
நட்டாற்றில் கைவிடுகிற நகையுடையமின் னுரைநம்பி
மோ—சம் போ—னாரோ தேர்கிலேனே (நாதன்)

மோது கடலும் பேரொலிசெய முனிவுடனிள மாருதம் வர

மோ—க—மீ—றும் வேளையிலே

முத்தமிழைப் பாடியிதமாய் சித்தியுறு குணாளன்பீர்

முகமதுகவி சுகமுறமொழி மோடியான பாங்கு நீங்கி - மோசம்

போ—ஞ—ரோ சிந்தை வாடுறேனே

முக்காட்டுக் கைவரிசையில் முகதரிசனம் பாதிதந்து

கூ—டும்—வே—ண்சய ராசை தீதே (நாதன்)



## காதலித்தல் பொது,

(அச்சே மோரி லாகீசே என்ற மெட்டு)

இராகம் - தேஸிகதோடி - தாளம் - திஸ்ரகெதி.

வெற்றிமதன்பூவாளி வேகமோடு பாயுதே
பாயுதே - நெஞ்சிற் - பாயுதே
மெய்யான வீரா - சையோகமாரா
மெதுவாக விழியாயோ கலிதீரவே [வெற்றி]

தண்ணார் மார்புடைய கண்ணாளா என்னைத்
தனியாக இதிகாறும் விடலாகுமா [வெற்றி]

எண்ணாத எண்ணிமனம் புண்ணாவ தாலே
இதமான மொழிபேசி எனையாளுவாய் [வெற்றி]

மெய்ப்பிர் முக்கம்மதுபேர் எப்போதுங் கூறி
விளையாடி யிருவோரும் களிகூரலாம் [வெற்றி]



## வர்ண்ணனை பொது.

(மேலான பெண்கள் நாயகம் என்ற மெட்டு)

இராகம் - ஸ்ரீராகம் - தாளம் - ஆதி.

பல்லவி.

வீராதி வீரனிவனே - மெச்சத்தகுந்த
தீரவொய் யாசனிவனே

அநுபல்லவி.

பாராளு மன்னர் க்ரீடம்
பாதம்தொடும் விசேடம்
சேருஞ்சிறப்புடைய சக்கரவர்த்தி
தேசமெல்லாம்தினம் செழித்திடும் விர்த்தி (வீராதி)

சரணங்கள்.

மேரு வெற்புநிகர் பாரமிக்கஇரு புயத்தான் - ஜீவகாரு
ண்யம்
விளங்குகின்ற உருப் பளிங்குபோன்ற இருதயத்தான் -
குடிகள்தம்மைச்
சாருமின்பதுன்பம் தனக்கென்றெண்ணும் பெரு
நயத்தான் - கரும்புவில்லின்

மாரனுக்கன்றிமயில் வீரனுக்கும் பின்வரங்கான்
யாரையுமேவச மாக்கிடும் பாங்கான்
எந்தஜென்மத்திலும் என்மனமீங்கான் (வீராதி)

ஓதும்விண்ணிலுள்ள மாதராரும்மிவன்காட்சி - கிடைத்
தாலிந்திரன்
உலகந்தன்னைவிட்டு விலகவேபுரிவார் சூட்சி - கடலு
டுத்த
பூதலத்திலிவன் காதலித்தணையுமாட்சி - படைத்த
வொரு
கோதையின்பாக்கியத்தைக் கூறவேண்டுமோ மேலும்
ஏதமில்லாதநல் விசைத்திருமாலும்
இணையறுமிவனேயென் னாயகன்போலும் (வீராதி)

தார்புரண்டமணி மார்பமுழுந்தும்படிபுல்லி - மலர்ச்சோ
லையில்
தனித்திருந்துபல இனித்தசங்கதிகள்சொல்லி - விகசி
தஞ்செய்
சீர்மிகுந்தசெங் கமலநீலமலரல்லி - நிறைகுளத்தில்
பீர்முகம்மலுமிகப் பேசும் ஜலக்கிரீடை
பெட்புடன்புரிந்திடில் பிரியுமென்வேடை
பிரியத்துக்கேற்றதே யிவன்முகஜாடை (வீராதி)



## மறுப்பு - பொது.

(பஹாரியாலா என்ற மெட்டு)

இராகம் - தேஸிகதோடி - தாளம் - திஸ்ரகெதி

வாாதமாதர் தம்மை வர்திக்கலாமா
மையலாலே தையலாரை வரதை செய்ததால் - முன்
மாண்டுபோன மானிடர்கள் பலகோடி - என்னை (வாதி)

துரோபதையைக் கண்டு தொல்லைப்படுத்தி
துஷ்டனைகீசகன் தொலையவில்லையா - என்
சொல்லினாலே சாபமுன்னைத்தொடாதா - சும்மா
(வாதிக்)

சிவானுபூதி வாய்ந்து சீரோங்கிவாழ்ந்த
தென்னிலங்கை வேந்தனை செல்வராவணன் - நற்
சீதையாலழிந்தசேதி தெரியாதா - வீணில் (வாதி)

அவாவினாலே மிக்க ஆத்திரங்கொண்டாய்
அன்புசான்ற பீர்முகம்ம தின்பவாசகம் - தன்னை
ஆய்ந்தறிந்திடாமல் வந்த பழிகாரா - பாவி (வாதி)



(மெத்தமையலாகுதென்று என்ற மெட்டு)

இராகம் - காபி - தாளம் - ஆதி.

புத்தியற்றபேதையேநீ உத்தமியெனைவிரும்பிக்
கத்துவதனாலேயுண்டோ லாபமே

இதுபாபமே - ஈவேன்சாபமே
வஞ்சகப்பபூலே சரியல்லடா
மிஞ்சிடிற்பழியே வருஞ்செல்லடா
தக்கவர்கள் கற்புநல மிக்கமடமாதர்களைத்
தாயினுஞ் சிறந்தோரென்று பேணுவார்
பாசம்பூணுவார் - பேசநாணுவார் (வஞ்ச)

முட்டுப்பட்டபின் தலையைத் தொட்டுக்குனியும்படிநரே
வட்டிக்குச்சனியனையேன் வாங்குகிறாய்
வீணில் ஏங்குறாய் - வசைதாங்குறாய் (வஞ்ச)

பஞ்சலக்ஷணத்தினிமை மிஞ்சுகவிப் பீர்முகம்ம
தஞ்சலிசெப் மாதரசி நாணடா
ஆசைபேணடா - நாசந்தானடா (வஞ்ச)



(சாரங்கந்தன்னிலே என்ற மெட்டு)

இராகம் - அடாணா - தாளம் - ரூபகம்.

பல்லவி.

பெண்ணோடு ஆணாய்ப் பிறக்காத பாவியைப்போலே - காமப்
பேய்பிடித்தாடிய நீபடித்தாயில்லை நாலே

அநுபல்லவி.

மண்ணாளுமன்னர் மனுதர்மநீதியின்
வழிதப்பிய பழியைச்செயல்
இழிவைப்பெறும் அழிவைத்தரும் (பெண்ணோடு)

சரணங்கள்.

இன்றைக்கிருப்பவர் நாளைக்கில்லையென்னும்வாழ்வு - இதன்
இன்பம் சதமென்று நம்புவதுமிகத் தாழ்வு
என்றைக்கும் சாகா திருப்பதைநாடியே
இசைபெற்றிட வசையற்றிட
நசையுற்றிடு பிசகைத்தடு (பெண்ணோடு)

பாவையர்கற்பினைப் பாழ்படுத்தும்வழிதேடி - இந்தப்
பாரிலும் விண்ணிலும் சீரழிந்தோர்பலகோடி
மூவகையின்பத் தமிழ்ப்பீர் முகம்மதி
மொழியுங்கவி தனையிங்கித
முதிரும்படி நிதமும்படி (பெண்ணோடு)



## சுவேதச்சந்திரன் - புலம்பல்.

(தஃதீர் ஹமாரி இந்திஜே என்ற மெட்டு)

இராகம் - ப்யாகு - தாளம் - திஸ்ரகெதி.

எண்ணமுந்தடு மாறுதேநான் என்னசெய்குவேன்
மண்ணிலென்போலத் துன்படைந்த மன்னர்யாவரே
(எண்)

சஞ்சாரமில்லாக் காட்டிலே தயங்கவிதியோ
நெஞ்சாரயார்க்கும் தீங்குநான் நினைத்ததில்லையே (என்)

வெங்கோபமுள்ள கானக விலங்குகளூடே
இங்கேதிரிந்துவாடியே இளைக்கநேர்ந்ததே (என்)

மெல்லடிநோக நாவுமே மிகவறண்டதே
செல்லுவேன் பிர்முகம்மதுதன் தேற்ற மேவியே
(என்)



## சதாரம் - பிரிவாற்றாமை.

(தில்மேஓ ஸால் பஸியா என்ற மெட்டு)

இராகம் - பிலஹரி - தாளம் - ரூபகம்.

என்னுயிர்க் காதலனும் இன்னும்வரக் காணேனேயோ
தன்னந்தனியே யிங்கு தத்தளிக்குதென் னுளமே (என்)

சிங்கம்புலிகரடி சேருகின்ற கானகமே
சேருகின்றகானகமே சோருகின்றேன் நானகமே (என்)

கூவுங்குயிலினங்காள் கொஞ்சுமொழி அஞ்சுகங்காள்
யாவருங்கண்டிலீரோ என்னருமைக்காதலனை (என்)

சென்றிங்கே யிட்டுவந்தால்-சீர்பெருகுவீர் புவிக்கே
சீர்பெருகுவீர்புவிக்கே பிர்முகம்மதோர்கவிக்கே (என்)



## சுவேதச்சந்திரன் - பிரிவு.

(தாதுஹோபரியாதுஹோ என்ற மெட்டு)

இராகம் - ஆபோகி - தாளம் - ஆதி.

போகிறேன் பரதேசமே பூவையுடன்சில காலமே
தந்தைதாயே சிந்தைநொந்து
சஞ்சலப்படவேண்டாம்
வந்துசேர்வேன் மைந்தனுனே
மங்கையுடன்சில நாளிலே (போகி)

தேவரீர்தங் கிருபையாலே தீங்குசற்றும் நேராது
பாவலன்பீர் முகமதின்சொல் படித்தினிதடைவீர்
தேறுதல் (போகி)



## அழகு - முடிசூட்டு.

(துவ்வேங்கி காடி என்ற மெட்டு)

இராகம் - ப்யாகு - தாளம் - ஆதி.

சந்தோஷமான சமாச்சாரம்பேஷ் பேஷ்
தாரணியின்மேலே சதாரமழகாலே
தந்தையேநான்ராஜ னுகினேன் பேஷ் பேஷ் (சந்தோ)

அக்காளுக்கிங்கே ஆகும் விவாகத்தால்
எக்காலும்ஷோக்காய் இருக்கலாம்பேஷ்பேஷ் (சந்தோ)

செங்கோலையோச்சி இங்கரசாட்சி
செய்குவோமேபீர் முகம்மதே சாட்சி (சங்தோ)



## தாசி - வருகை.

(ஜப்தகலந்தரு என்ற மெட்டு)

இராகம் - கீர்வாணி - தாளம் - ஆதி

மன்னவன் வாழ்ந்திடு மாளிகைநாடியே
வந்தடைந்தேன் மனமகிழ்வாக
மாதொருநல்ல சேதியைக் கேட்டு
வந்தடைந்தேன் மனமகிழ்வாக

எழில்

மங்கையொருத்தியை இங்கேயழைத்து
வந்துகொடுத்திட்டால் - மன்னன்
நாட்டிலே பாதி பெறுவேன்
மண்ணுலகில் எண்ணிலாத மாட்சியுறுவேன் (மன்ன)

நன்னயமேவிய முத்தமிழ்ப் பாவலன்
நாவலன் பீர்முகம்மது பாடல்
நாடியே யின்று பாடியே சென்று
ஂ் கைதனைக்கொண்டு வருவேனே

இந்த

நாற்றிசையோரும் போற்றிடு வேந்தன்
நீத்தியனை வேண்ட - முன்னே
நான் செய்த புண்ணியமிதே
நற்பொழுதில் உற்பவித்த கண்ணியமிதே (மன்ன)



## சதாரம்—மறுப்பு.

(எங்கே போனாலும் உன்கூட என்ற மெட்டு).

இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - திஸ்ரகெதி.

பல்லவி.

சொல்வதெல்லாம் சொன்னேன் நானே - இந்த்
துன்பத்திற் கென்ன செய்வேனே

அநுபல்லவி.

கல்வியறிவு கருதாக்கொடும்பாவி
வல்வினையாலே மடிவான் துயர்மேவி (சொல்வ)

சரணங்கள்.

நல்லவரில்லாத எல்லை - என்றன்
நாயகனுங் காணவில்லை
சொல்லியழுதாலும் தொல்லை - இந்தத்
துஷ்டப்பயல் சொன்ன சொல்லை

வெள்ளை இடியிவன் மேலே விழுகாதோ
கொள்ளையொருநாளில் அள்ளி விழுங்காதோ (சொல்வ)

பித்துப்பிடித்தவன் போலே - இவன்
பேசுகிறான் காமநூலே
சித்தப்பிரமையினாலே - என்ன
செய்யத்துணிவானோ மேலே
முத்தமிழ்வாக்கு முதிர்பீர் முகம்மது
உத்தமன் பாடல் உணர்ந்தே புவிமீது (சொல்வ)



## கள்ளன்—வேண்டுகை.

(அம்பாள் மதுரை மீனாட்சி என்ற மெட்டு.)

இராகம் - தேவிகதோடி. தாளம் - ஆதி.

ஐயா பழனிமலை வேலா - நல்
அமிர்தவல்லிபாலா - துதிக்கும்
அடியவர்க் கனுகூலா
அருள்புரிவாய் சீலா - அருள்புரிவாய் சீலா

இந்த

வையகமுண்ட பெருமானே - நான்
வணங்கினேன் உன்தாளே - கண்ணைக்கோல்
வைத்திட இந்நாளே
வரமுதவியாளே - வரமுதவியாளே

ஆடா

பூமிபுகழ்மதுரை வீரா - உன்னைப்
போற்றுவேனே தீரா - சாராயப்
பூசைசெய்து சீரா
புயங்கொடுப்பாய் ஜோரா - புயங்கொடுப்பாய் ஜோரா

ஆடா

சாமி கருப்பணனே வாடா - இத்
தருணமுதவி தாடா - துணைக்குச்
சார்ந்து நில்லுமடா
தகையுள்ள விசேடா - தகையுள்ள விசேடா

அம்மா

அங்காளேஸ்வரியே நானே - உன்னை
அடுத்து நம்பினேனே - என்னை நீ
ஆதரிப்பாய் தானே
ஆடு வெட்டுவேனே - ஆடு வெட்டுவேனே

அம்மா

மங்காத காளியென்னும் தாயே - உன்னை
வாழ்த்துகின்றேன் சேயே - என்மீது
மனமிரங்கி நீயே
வழித்துணையா வாயே - வழித்துணையா வாயே

ஐயர்

புட்டுக்கு மண்சுமந்த சொக்கா - உன்னைப்
புகழுகின்ற பக்காத் - திருடனென்
போலீசார்க்குச் சிக்காப்
புதுமையருள் மிக்கா - புதுமையருள் மிக்கா

ஐயா

மொட்டைக் கோபுரமுனியாண்டி - பீர்
முகம்மது மகிழ்பாண்டி - நன்னாட்டில்
முதிய உன்னையே வேண்டி
முடிப்பேன் மதில் தாண்டி - முடிப்பேன் மதில்
தாண்டி



## மறுப்பு—பொது.

(ஆனந்த சோபனமே என்ற மெட்டு).

இராகம் - மோகனம் - தாளம் - திஸ்ரகெதி.

மானந்தான் மாநலமே எனிந்த ஆகுலமே
வாழ்வுங்கெடு கேவலமே சூழுங்கேள் பூதலமேல்
மாயங்கொண் டேநம்பும் யாவும்போய் கண்டாய்
வாசஞ்செய் சீரின்றி வீணன்பே கொண்டாய்
மூகபதியுல கினைமேவும் வாழ்வுக்குப் பீர்
முகமதுகவி தனையேநன் ருயுற்றுப் பார்

மாதர்க்குண்டோ கற்பு நேர் சுத்தமே
பேதைப்பெண்ணே யொப்புவாய் சித்தமே (மூன)



(பாயுதே என்ற மெட்டு).

இராகம் - அடாணா தாளம் - ஆதி.

பல்லவி.

செல்லடி - மூடச் - சிறுக்கி யுன துநாவை
நறுக்கிவிடுவேன் தூரச் (செல்லடி)

அநுபல்லவி.

கொல்லுந் தொழிலுடைய கூற்றுவன் போல் வந்து
தொல்லைப் படுத்துங்கொடுஞ் சூரியே யென்னை
விட்டுச் (செல்லடி)

சரணங்கள்.

மாயா விகாரமதி லோயாதழுந்தி நசைத்
தீயா லெரிந்துபவ நோயால் வருந்துகின்ற
பேயே அறிவுகெட்ட நாயே என்னிடம் வந்து
வாயாடி நிற்பதற்கு நீயா இடமுள்ளவள் (செல்லடி)

கற்போ ருளங்கவரும் பொற்பார் தமிழ்ப்புலமை
நற்பீர் முகம்மதருட் சொற்போல் நடக்குமென்னை

விற்போர் புரியுமதன் துற்போ தனைக்கிசையக்
கற்பே யிழந்துகெஞ்சி நிற்பா யெனிலுதைப்பேன்
(செல்லடி)



## வள்ளிகாட்சி (நாரதர்).

(வங்கார மார்பிலணி என்ற மெட்டு).

இராகம் - தோடி. தாளம் - ஆதி.

இங்கே யுலாசமுடனே யுலவு மாதரசி
இன்பான வேள்மருவு தேவிரதியோ தவசி
என்போலு வோர் சுரரு மாசையுறு மாசரசி -
இவளாரோ

பங்கேரு கானன வசீகர மினுள்கரிய
வெங்கால நேர்விழியி னுளுவமை யோதரிய
பைந்தாம வார்குழலின் மாதிவளே யெதெரிய -
முபல்வேனே

ஆலோல வோசைதரு வாயமுதை யேபருகி
லீலா விநோதசுக வாழ்வுதனி லேயுருகி
ஆசார மாதுதுணை யாகுநல மேபெருகி - உயர்யோகன்
மேலான தோகைமயில் வீரனவனே புவியில்
வேறுரு மேயுளர்கொல் பீர்முகம தார்கவியில்
மேவார்வ மோடுசெலு வேன்முருக வேள்செவியில் -
மொழிவேனே



## நாரதர் - வள்ளி (தர்க்கம்)

(கண்ணுயிரம் படைத்த என்ற மெட்டு).

இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - ஆதி.

நாரதர்.

சிங்கார மிக்கபுனத் திங்கே தனித்துலவும்
தெரிவையருக்கர சிவளுயர் பொற்பதி மங்கையோ -
கன்னற்
சிலைமதனுக்கொரு துணையென வுற்றிடு நங்கையோ

வள்ளி.

சங்கீதமேழ்புவிக்கு மங்காதயாழ்படைத்த
தவமுனி வர்க்கொரு மடமகள் கற்பனையேனையா -
கானிற்
சகல குறக்குல மகளிரி லுத்தமி நானையா

நாரதர்.

பொன்னே நலங்கனிந்த மின்னே யிலங்குமுன்றன்
புருவ மதற்கெழில் மதனுயர் கைச்சிலை நாணுமே -
இந்தப்
பருவமதிற்சுக பதவி கிடைத்திடவேணுமே

வள்ளி.

என்னேடினீ யிம்மொழி சொன்னுலிடர் வந்திடும்
இழிவுற நிற்பது முனிவருமக்கழ கல்லவே - வந்த
வழிதனையுற்றிடு மினியகுணத்தொடு செல்லவே

நாரதர்.

முப்போது மன்பருளந் தப்பாது நின்றருளு
முருகனி னற்புத திருவடிவுக்கிணையிடுவாய் - தன்னால்
மொழிவது தப்பித மவனை யணைத்திட நாடுவாய்

வள்ளி.

ஒப்பாத சொல்லையிங்கு செப்பாது செல்லுமென்ற
உரையுமுனக்கிரு செவியதனிற்புகவில்லையோ -
வேலன்
உயர்வுதனைச்சொலி பெண்ணையுமயக்கிட வல்லையோ

நாரதர்.

அன்பாளன் முருகையன் இன்பார் பன்னிருகையன்
அறுமுகசொற்பன மனதிலுதிப்பது பாக்யமே -
இம்மை
மறுமை தரச்சகு வதுவையு மிக்க சிலாக்யமே

வள்ளி.

முன்பார்தகவுடைய மன்பீர்முகமதுசொல்
முதிய தமிழ்க்கவி பதியு மனத்தினில் மோகமே -
உண்டோ
முனிவ உனக்கிலை கனிவு மிகுத்த விவேகமே.



(திருச்சி நஸரியாலகாயே என்ற மெட்டு).

இராகம் - இந்துஸ்தானி தோடி - தாளம் - ஆதி.

வருத்துவதழகோ மன்னுமையல் மீறுதே
வருத்துவதழகோ சொல்லாய்

கருத்திலுன்னைப் பொருத்தியபின்னே
காமனாலே யடைந்த துயர் கொஞ்சமா (வருத்து)

பொன்னெழில் மேனி பூத்தது பசலை
பூவையாவி மெலிந்து மிக வாடுறேன் (வருத்து)

அன்னமும் பாலும் அமுதமும் வெறுத்தேன்
ஆசையால் விழி நித்திரையு மறுத்தேன் (வருத்து)

ஏங்கியபோது பாங்கியர்ோது
ஏதந்தீர்மொழி யாலே உயிர் நின்றது (வருத்து)

தீங்கவிமுகிலாய் ஓங்கிய புகழ்சேர்
சிலனும் பீர்முகம்மது சொற்பாடினேன் (வருத்து)



## காதல்—பொது.

(சரணகமலாலயத்தை என்ற மெட்டு).

இராகம் - செஞ்சுருட்டி. தாளம் - மிஸ்ரசெதி.

அரிய புகழேழபடைத்த புலவர்திரு நாவிலுற்ற
அமிர்தகவி போலினித்த - மொழியாலே
அமரிலுயர் வீரமிக்க நிருபர்கையிலே நிலைத்த
அழகுபெறு வேல்பழித்த - விழியாலே
விரியவனி யாசைவிட்ட தவமுனிவ ரேனுமுற்ற
விரதநெறியே தவிர்த்து - நிலைமாற

விரகவெறியே யெழுப்பு பொருடிவமாயுதித்து
திமிரிசையினேடு நிற்கு - மடமாதே.
பரிதியொளியால் மலர்ச்சி யுறுகமலமோடு மற்ற
பனிமலர்களேவி யுக்ர - மதவேளும்
பகலிரவு போர்தொடுக்க எனதுடலுமாவி முற்றும்
பதறுவதனுல் நினைத்த - படியே நீ
துரிதமுடனே யடுத்து மனவயிரமே விடுத்துத்
துணையினலமே படைத்து - மகிழ்வாகச்
சுகமதுரவாசகப் பீர் மூகம்மதிசையே படித்துச்
சுகிர்தசுபசோபனத்தோ - டுறைவாயே



(மானே நானே உன்னை என்ற மெட்டு).

இராகம் - பிலஹரி, தாளம் - ஆதி.

தர்க்கம்.

லலிதாங்கி.

ஆசை யாலேமன மெலிந்ததே நாயகா
ஆத லாலென்னை அன்புடன் பேணுவாய்
அருள் - செய்வது தீமையா (ஆசை)

அழகேசன்.

வேசை போலேயுளந் துணிந்து நீ மேவுறுப்
வீணி லேயென்னை வேண்டியே நில்லாதே
வெட்க - மில்லாத பேதையே (வேசை)

லலிதாங்கி.

விலை மர்தரெனிற் பலரையும் வேண்டுவார்
வேறு யாரையும் மேவிலேன் தேவிநான்
விடை - தந்தது நீதியா (ஆசை)

அழகேசன்.

கலை யோதுவதா லிணங்கிடேன் பாவையே
காத லீச்னின் பாதமீ தாகினல்
கதி - தன்னாலே சேருமே (வேசை)

லலிதாங்கி.

உடல் பூவுலகிற் பாழாகவே போவதோ
ஓது நூல்களில் ஈதுயார் கூறினர்
உம - தெண்ணத்தை மாற்றுவீர் (ஆசை)

அழகேசன்.

திட மாகவே சிற்றின்பமது கேவலம்
தேர்வ தொன்றெனில் பிர்முகம்மது
தினம் - தேடும் பேரின்பமே (வேசை)



## தேசபக்தர் வாழ்த்து.

(ஜிஸ்தின்ஸே மிலித்தேரேக் காஹேநபி
என்ற மெட்டு.)

இராகம் - பியாக் - அடதாளம் - ஆதி.

தேசாபிமானி முகம்மதலி சிங்கம் செல்வத்
துணைவர் ஷவுக்கத்தலி

ராஜரீகந்தனி லேயார்கலி - இவர்
நாமஞ் சொன்னாலோடு மேசேர்கலி (தேசா)
செல்லும் திசையெல்லாம் சிரேமலி - இந்தச்
சித்தர் கிலாபத்தின் போரேவலி
அல்லாகு அக்ப ரெனும் பேரொலி - விரி
ஆலத்திலெங்கும் பரவச்சொலி

தொகைரா.

அன்பாளர் கோடிகோடி ஆரவாரித்தே சூழ
முன்போல நம்மனோர் விமோசனம் பெற்றே வாழ

முடுகு.

அற்புதப் பிரசங்கம் புரிந்திடும் பெருமை
அகத்தினைத் தெளித்திடும் அருமையிலருமை
ஆயுள்பெருகியே வாழ்க முகம்ம தலியொடு நல்ல
ஷவுக்கத்தலி.



வையகம் போற்றும் பம்பாய்ப் பதியான் - கொடை
வள்ளலாம் சோட்டானி மாநிதியான்
துய்ய முகம்மத்காசீம் மதிமான் - உயர்
தோன்றல் சையதுசேன் மெய்த்துதியான்

தொகைரா (வேறு.)

சுபதேசமின்று மிடியால்வருந்து துயரோடு
சோர்ந்த மதநீதி
தொலையாதிலங்க வகையே தெரிந்து துணிவே
மிகுந்த விதமோதி

முடுகு.

துருக்கி சுல்த்தானே நாயகமென்னத்
திலக்கிடத்தானே நியாயங்கள் சொன்ன
சுத்தவீரத்தேச பக்தரிவர்நபி தோழரைப்
போலவே வாழியவே.



சென்னைநகர்க் கோமரின் யாக்குபுசேன் - நற்
சிராப்பள்ளி சேர்மூர்த்த ஸாப்பெருமான்
மன்னுந்திடவான் முகம்மதுசேன் - திண்டு
மாநகரின் எம் - ஏ - பாஜிசீமான்

தொகையரா (வேறு.)

வாழ்க்கைத் திறத்தினிலே மாட்சிவந்தே மாதரமே
மார்க்கத்தி னுக்கிசுலாம் தீர்க்கமறை யாதரமே

முடுகு.

மனத்திடைப் பொருத்தியே உடல்பொருளாவி
அனைத்தையும் அளித்திடும் அடல்மிக மேவி
வாய்மைவிரதங் கடைப்பிடித்தோரிவர் மாதவ
சீலராய் வாழியவே.



பாரதமாதா பணிவிடையார் - தமிழ்ப்
பாவகைவல்ல துணிவுடையார்

பிருமுகம்ம தணிநடையார் - நீதி
பேசுதற்கென்றுந் தணிவடையார்

தொகைரா (வேறு.)

பெற்றோர்க்குப் பிள்ளைகள் செய்யும் தொண்டுக்குப்
பின்னந்தா னுண்டோ
கற்றோர்க்குத் தங்குலம் தேசம் இரண்டும்
கண்ணில் மேலன்றோ

முடுகு

பிணத்தினைப் போலினி வாழ்வது தீது
பேதமைத் தூக்கத்தை நீக்கியிப்போது
பேசுங் கிலாபத்துந் தேசியமுந்துணை பேணி
யெல்லோருமே வாழியவே.



(கௌனமிசி யாரேத்தோரே என்ற மெட்டு.)

இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - ஆதி.

லஜபதிராய் போதிப்பதே ஞானோபதேசம்
ஞானோபதேசம் தானே சுதேசம் - சுய
ராஜ்ஜியமாக - நன் - மீட்சி யுண்டாக - இந்
நாள்வந்திட்ட தென்பதுவே நமது உத்தேசம் (லஜ)

பலவளமும் மலிவுடைய பாஞ்சாலநாடு
பாஞ்சாலநாடு பன்னாளன் போடு - முன்

பண்ணிய யோகம் - ஓர் - புண்ணிய தேகம் - இப்
பாரிலிந்த லாலாஜி படைத்துவந்த பீடு (லஜ)

அமிர்தசரஸ் படுகொலையின் அநியாயங் கண்டு
அநியாயங்கண்டு - ஆத்திரங்கொண்டு - நம்
ஆண்மையைக் காட்ட - நற் - கேண்மை பாராட்ட - இவர்
ஆய்ந்துசொல்லும் முடிவுரையால் அநுகூலமுண்டு (லஜ)

சொன்னசொல்லின் உறுதிகெடத் துருக்கி சுல்த்
தானே
துருக்கி சுல்த்தானே - நெருக்கியே தீனே - பொய்த்
தோற்றத்தார் நாசம் - செய் - தேற்றத்தாற்
பாசம் - சேர்.
துணைவர்களாம் ஹிந்து முஸ்லீம் தொகுப்போமே
சேனே (லஜ)

ஒத்துழையாக் கொள்கைதனில் ஒன்றாகச் சேர்ந்து
ஒன்றாகச் சேர்ந்து - நன்றாகத் தேர்ந்து - நல்
ஊக்கத்தினாலே - நம் - நோக்கத்தைப் போலே - இனி
உய்குவமே பாதகங்கள் ஒருவாறு தீர்ந்து (லஜ)

முத்தமிழ்ப் பீர் முகம்மதுதான் மொழி போத
வாக்யம்
மொழி போதவாக்யம் - அழியாத பாக்யம் - நம்
முந்தையோர் வீரம் - நற் - சிந்தைசேர் சாரம் - அது
மூள்வதுவே காரியத்தை முடிக்கும் வைராக்யம் (லஜ)



(சாராஜஹா ஹமாரா என்ற மெட்டு.)

காந்தியடிகள் பாதம் - ஏந்துவதே சுபோதம்

சாந்தகுணத்தின் குன்று - சாத்வீகப் போரில் நின்று
வேந்தர்களையும் வென்று - மீட்சி யளிப்பார்
நன்று (காந்தி)

மெய்ஞ்ஞான ஜீவன் முத்தர் - மேலான தேசபக்தர்
எஞ்ஞான்றும் ஆத்மசுத்தர் - யாவையும் வல்ல
சித்தர் (காந்தி)

ஆங்கிலந் தேர்ந்திட்டாலும் - ஆசாரத்தை மேன்
மேலும்
தாங்கிய சீர்த்திசாலும் - தக்கோரென்றே யெக்
காலும் (காந்தி)

தென்னாப்ரிக்காவிற் பண்டு - செய்திட்ட தேசத்
தொண்டு
பன்னாளுங்கண்டு கண்டு - பாரே புகழ்வதுண்டு (காந்தி)

இக்கால மிந்தியாவை - ஈடேற்றுந் தூயசேவை
மிக்க மஹாத்துமாவை - வேண்டிற் கிட்டாத
யாவை ? (காந்தி)

நாலாகலையின் வாரி - ராஜகோபாலாச்சாரி
சேலத்தின் விவகாரி - செப்புமொழியைக் கோரி
(காந்தி)

மேதாவி டாக்டர் ராஜன் - வீரத் திருச்சிவாசன்
மூதறிவாளர் நேசன் - * மோகன்தாசர்க்கேதாசன் (காந்)

ஊரிதோறுங் கூட்டங்கூடி - ஒற்றுமையே கொண்டாடி
பீர்முகம்மது நாடிப் - பேசுங் கவிகள் பாடிக் (காந்தி)



(செந்தமிழுலகினில் என்ற மெட்டு.)

நானிலம் போற றுங்கவிச் சக்ரவர்த்தி ரவீந்திர
நாதத் தாக்கூரின் பெருமை - தனையெடுதது
ஓதுவ தென்று லருமை
நால்ா கலையுணர் நூலோர் பரவிய
மேலோ ரிவர்கவி போலார் மொழிபவர்
ராஜரீகமுங் கற்றவர் - இந்தியர் பூர்வ
நாகரீகமும் பெற்றவர்

ஆங்கிலேய மொழியின் பாங்கிலேயே பயிற்சி
ஓங்கிய மெய்ப் புலமையோர் - சிகையின் மிசைத்
தாங்கு தகைத் தலைமையோர்
ஆன்றோர் வழிவழி ஊன்றோர் வருளிய
ஈன்றோர் சுயமொழி தான்றோர் கடமையில்
ஆராயு மின்பு முடையோர் - கற்பகத்திற்கு
நேராயிலங்கு கொடையோர்

* இவ்வடியிலுள்ள மோகன்தாசர் என்ற பெயர் மகாத்மாவின் முதற் பெயரென்று அறிக.

ஜாலியன் வாலாத் தோப்பில் சர்மைக்கேல் ஓட்வியரும்
சண்டாளன் டையரும் செய்த - படுகொலையைக்
கண்டோர்வெந் துயர மெய்த
சர்க்கார் நீதி கிடைக்காவாறு
தனுக்காய் வேலை முடித்தோர் பாவனை
தாங்கண்டு நோக்க மறிந்தோர் - சர்ப்பட்டம்
வாப்பஸ்
வாங்கென்று தூக்கியெறிந்தோர்.

இன்ன கவிவரரை யாம் போற்றும் தன்மையே போல்
எம்பால் வியப்புடைமையே - பாராட்டிவரும்
அன்பாளர்க் கெங்கடமையே
எக்காலுஞ்சுப மிக்கே வாழ்க
வெனப்பாவோது மதிப்பே யாகலின்
இத்தோடவர்கள் பேரே - உள்ளத்திலன்பு
வைத்தே புனைதல் சீரே.

செல்ல பாட்சாவெனவே செல்வப் பெயர்புனைந்த
தீரன் சுலைமான் பாட்சாவும் - ஈரோட்டிலவர்
சேரும் பிரபுவாய் மேவும்
சீலம் பெருகிய சுல்த்தானுங் கடல்
ஞாலந்தனில் மகிழ் வித்தாரம் பெறச்
செய்வா னிறைவ னருளே - இதுவே தமிழ்
மெய்வாண ரகப்பொருளே.

திண்டுநகர்த்தலைமை முத்தையவேள்கஸ்தூரிச்
செம்மல் பால் சாமியுடனே - எம். ஏ. பாஜியும்
சீரோங்கி வாழ்வர் திடனே
செப்பும் பலகலை கற்றுந் திறமொடு
சித்தம் பதிவுசெய் திட்டங் குலவிய
சிங்கம் ஷண்முக சுந்தரம் - நீடுவாழவே
பொங்கும் சந்ததமும் வரம்.

மாமதுரைப் பதியில் சாலியா வெள்ளைக் கண்ணு
வாழ்க்கைத் திறம் பெருகவே - கருணைமிகும்
வல்லோ னருள் வருகவே
மற்றும்பெரிய குளத் தென்கரைதனில்
முற்றும் புகழது பெற்றின்புறுதுரை
மால் ராம சிதம்பரமே - மங்களமாக
வாழ்கேம நிரந்தரமே.

தெள்ளியோர் சேருஞ் சிராப் பள்ளியி லெங்கருணைத்
தேசிகன் பெற்ற புத்திரன் - முகம்மத்கனித்
தேட்டாளனுற்ற மித்திரன்
தினமுந் துணைதரு தாவூத்பாயொடு
திடமிஞ்சியதகை ஆஷிம்சாகிபும்
டீ. கே. பாஜியும் வாழி - ஹமீதுஷம்சு
தீன்யூசுப் சாகிப் வாழி.



# திருத்தக் குறிப்பு.

இப்புத்தகத்தின் 8 ம் பக்கத்தில் திருப்பதமருள் வீரையா என்று தொடங்கும் பாட்டிற்கு முத்திரை யடியாக..................

" பேரின்பத்துறையே பேணிடும் பொறையே
பீர்முகம்மது பெறுவது முறையே" என்பதைச் சேர்த்துப் பாடுக.

10-ம் பக்கத்தில், வாழி வாழி யென்னெஞ்சமே என்று தொடங்கும் பாட்டின் 5-வது வரியில் சாகவரம் என்றிருப்பதைச் காகாவரம் என்று திருத்திப் பாடுக.

மீ. பீர்முகம்மது.